# இயலிசை

தனிப்பிரதி விலை 0-50 காசுகள்

| | |
|---|---|
| ஆண்டு சந்தா | ரூ. 10 |
| அரையாண்டு சந்தா | ரூ. 5 |

சிறப்பாசிரியர்:
சிதம்பரம் S. மீனாட்சிசுந்தரம்

துணை ஆசிரியர்:
K.P. இளங்கோவன்

''இயலிசை''
57, தெற்கு சிவன் கோயில் தெரு,
கோடம்பாக்கம் சென்னை-24.

மலர் 3 15—10—84 இசைக்கலை தமிழ் மாதமிருமுறை இதழ் 9-12


முதல்வர் நலம் பெற

## இசைக்கலைஞர்கள் இசை வழிபாடு

தமிழக முதல்வர் டாக்டர் M.G.R. அவர்கள் இம்மாதம் துவக்கத்திலிருந்து உடல் நலமின்றி சென்னை அப்போலோ மருத்துவ மனையில் தீவிர சிகிச்சை பெற்று வருகின்றார். இவரது உடல்நிலைக் குறித்து கலை உலகமும் மிகுந்த கவலை கொண்டுள்ளது. இவர் விரைவில் நலம் பெற கர்நாடக இசைக்கலைஞர்கள் சென்னை மயிலை கபாலிசுவரர் ஆலயத்தில் இசை வழிபாடு நடத்தினர். திரைப்பட இசைக் கலைஞர்கள் வடபழநியாண்டவர் கோவிலில் இசை வழிபாடு நடத்தினர்.

இரண்டு நிகழ்ச்சிகளிலும் கலந்து கொண்ட இசைக்கலைஞர்கள் செம்மங்குடி சீனுவாசய்யர், சிதம்பரம் S.ஜெயராமன், மதுரை சோமசுந்தரம், பாலமுரளி கிருஷ்ணா, K.J.ஜேசுதாசு, சீர்காழி கோவிந்தராஜன். T.M.சௌந்தரராஜன், சூலமங்கலம் சகோதரிகள், மலேசியா வாசுதேவன், வாணிஜெயராம், P சுசீலா, சசிரேகா, T.L மகாராஜன். தீபன் சக்ரவர்த்தி, ஜெயவிஜயா, குன்னக்குடி வைத்யநாதன். T.K.மூர்த்தி மற்றும் பலர், ரசிகர்கள் பொது மக்கள் கலந்து வழிப்பாட்டினை சிறப்பாக நடத்தினர்.

## கவிஞர் பெருமக்களே!

பிரபல இசைத்தட்டு நிறுவனம் உடனே தயாரிக்க இருக்கும் அய்யப்பன் பக்திப்பாடல்கள் இசைச்சுட்டி Cassette இசைத்தட்டு இவற்றில் பிரபல பாடகர்கள் பாட பக்திப்பாடல்கள் தேவை. இயலிசைக்கு அனுப்பிவைக்கவும்.

--ஆசிரியர்

## கலைஞர்களுக்கும், ரசிகப்பெருமக்களுக்கும்



இயலிசை ஆதரவாளர்களுக்கும்
வாசகர்களுக்கும் பெதுமக்களுக்கும்
தீபாவளி திருநாள் வாழ்த்துக்கள்!

---ஆசிரியர்

## வெளிநாடு செல்லும் கலைஞர்களுக்கு

தமிழ் நாட்டு கலைகள் கலைஞர்கள் புகழ் வெளிநாடுகளில் பரவியுள்ளது. இதற்கு தமிழர்கள் பல நாடுகளிலும் குடியேறி வாழ்வதும் ஒரு காரணம். தமிழ் திரைப்படங்கள் ''வீடியோ'' மூலம் உடனே சென்று வெளிநாட்டு தமிழர் இல்லங்களில் பார்க்கப்படுகின்றது. திரையிசை, கர்நாடக இசை, பக்திப்பாடல்கள் இசைத்தட்டுகள் இசைச்சுட்டிகள் Cassttee ஏராளமாக வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாகின்றது.

இப்பாடல்களை பாடும் கலைஞர்களையும் நேரில் அழைத்து நிகழ்ச்சிகள் நடத்துவது தமிழர்கள் வாழும் பல நாடுகளிலும் தற்பொழுது பிரபலமாகியுள்ளது. அமெரிக்கா, ஐரோக்கிய மேலை நாடுகளில் பெரும்பாலும் கர்நாடக இசைக்கலைஞர்களையும், மலேசியா, சிங்கப்பூர் போன்ற கிழைநாடுகளில் திரைப்பட மெல்லிசை கலைஞர்களையும் அழைக்கின்றனர். நல்ல தொகையும் பலவிதகணக்கில் வழங்குகின்றனர். இந்தியாவிற்கு இவர்களால் அந்நியச்செலவாணி கிடைக்கின்றது. என்றாலும் கலைஞர்களிடம் சுங்க அதிகாரிகளின் கெடுபிடி உண்டு.

வெளிநாடு செல்லவேண்டும் என்ற ஆர்வம் கலைஞர்களிடையே வளர்ந்துள்ளது என்றாலும் வெளிநாடு செல்லும் கலைஞர்கள் அனைவரும் பொருளாதார ரீதியில் வெற்றிகரமாக திரும்புகிறார்களா? பலர் தக்க வெளிநாட்டு நபர்கள் மூலமாக செல்லாததால் பலவித இன்னல்கள் அடைந்து திரும்புவதாக இயலிசைக்கு செய்திகள் வந்துள்ளன, சமீபத்தில் மலேசியா சிங்கப்பூர் சென்ற மெல்லிசை குழுவினரை அழைத்து சென்ற வெளிநாட்டு முகவர் Agent ஏமாற்றி விட்டதாக அறிகிறோம். தவிர இங்கேயே சிலர் வெளிநாடு அழைத்து செல்கின்றேன் என்று சில கலைஞர்களை உள்ளூர்காரர்களே பலவாறு ஏமாற்றியதாகவும் அறிகிறோம்.

எனவே வெளிநாடு செல்லும் கலைஞர்கள் சற்று கவனமாக இருக்க கேட்டுக்கொள்கிறோம்.

## தமிழிசை ஆதிமும்மூர்த்திகள்

சென்றாண்டு சென்னை தமிழிசைச் சங்க இசை விழாவில் டாக்டர் சீர்காழி கோவிந்தராஜன் தமிழிசை ஆதிமும்மூர்த்திகள் என 300 வருடங்களுக்கு முன் தோன்றிய அருணாசலக்கவிராயர், முத்துத் தாண்டவர், மாரி முத்தாப்பிள்ளை இவர்களைக் குறிப்பிட்டு விளக்கங்கள் தந்து அவர்களது பாடல்களைப்பாடி சிறப்பித்தார்.

பின்னர் சென்னை இராமலிங்கர் பணிமன்றம் நடத்திய இசைக் கலை விழாவிலும் இவர்களைப்பற்றி பேசப்பட்டு தனி இசையரங்களும் நடத்தப் பெற்றன. இவர்கள் அக்காலத்தே ஏராள தமிழ்ப்பாடல்களை (கீர்த்தனங்கள்) இசையமைப்புடன் பாடி தமிழிசைத்தொண்டாற்றி வந்தவர்கள். தமிழிசை விழாக்கள் நடத்தும் சபைகள் அனைத்திலும் இவர்களது படங்களை வைதது சிறப்பிக்க வேண்டும், பாடல்களைப் பாட வேண்டும் என இயலிசை பணிவன்புடன் கேட்டுக்கொள்கின்றது.

## நாரத கான சபை, கரூர்

ஜெர்மனி

| | |
|---|---|
| 21-10-84 | ஸ்ரீமதி அஞ்லிகா ஸ்ரீராம் - பரத நாட்டியம் |
| 18-11-84 | கரூர் கிருஷ்ணமூர்த்தி - பாட்டு |
| | திருவள்ளூர் பார்த்தசாரதி - வயலின் |
| | திரு விடை மருதூர் ராதாகிருஷ்ணன் - மத்தளம் |

# இயலிசை

தனிப்பிரதி விலை 0-50 காசுகள்

| | |
|---|---|
| ஆண்டு சந்தா | ரூ. 10 |
| அரையாண்டு சந்தா | ரூ. 5 |

சிறப்பாசிரியர்:
சிதம்பரம் S. மீனாட்சிசுந்தரம்

துணை ஆசிரியர்:
K.P. இளங்கோவன்

''இயலிசை''
57, தெற்கு சிவன் கோயில் தெரு,
கோடம்பாக்கம் சென்னை-24.

மலர் 3 15—10—84 இசைக்கலை தமிழ் மாதமிருமுறை இதழ் 9-12


முதல்வர் நலம் பெற

## இசைக்கலைஞர்கள் இசை வழிபாடு

தமிழக முதல்வர் டாக்டர் M.G.R. அவர்கள் இம்மாதம் துவக்கத்திலிருந்து உடல் நலமின்றி சென்னை அப்போலோ மருத்துவ மனையில் தீவிர சிகிச்சை பெற்று வருகின்றார். இவரது உடல்நிலைக் குறித்து கலை உலகமும் மிகுந்த கவலை கொண்டுள்ளது. இவர் விரைவில் நலம் பெற கர்நாடக இசைக்கலைஞர்கள் சென்னை மயிலை கபாலிசுவரர் ஆலயத்தில் இசை வழிபாடு நடத்தினர். திரைப்பட இசைக் கலைஞர்கள் வடபழநியாண்டவர் கோவிலில் இசை வழிபாடு நடத்தினர்.

இரண்டு நிகழ்ச்சிகளிலும் கலந்து கொண்ட இசைக்கலைஞர்கள் செம்மங்குடி சீனுவாசய்யர், சிதம்பரம் S.ஜெயராமன், மதுரை சோமசுந்தரம், பாலமுரளி கிருஷ்ணா, K.J.ஜேசுதாசு, சீர்காழி கோவிந்தராஜன், T.M.சௌந்தரராஜன், சூலமங்கலம் சகோதரிகள், மலேசியா வாசுதேவன், வாணிஜெயராம், P சுசீலா, சசிரேகா, T.L மகாராஜன், தீபன் சக்ரவர்த்தி, ஜெயவிஜயா, குன்னக்குடி வைத்யநாதன், T.K.மூர்த்தி மற்றும் பலர், ரசிகர்கள் பொது மக்கள் கலந்து வழிப்பாட்டினை சிறப்பாக நடத்தினர்.





## கலைஞர்களுக்கும், ரசிகப்பெருமக்களுக்கும்



இயலிசை ஆதரவாளர்களுக்கும்
வாசகர்களுக்கும் பெருமக்களுக்கும்
தீபாவளி திருநாள் வாழ்த்துக்கள்!

---ஆசிரியர்

## வெளிநாடு செல்லும் கலைஞர்களுக்கு

தமிழ் நாட்டு கலைகள் கலைஞர்கள் புகழ் வெளிநாடுகளில் பரவியுள்ளது. இதற்கு தமிழர்கள் பல நாடுகளிலும் குடியேறி வாழ்வதும் ஒரு காரணம். தமிழ் திரைப்படங்கள் ''வீடியோ'' மூலம் உடனே சென்று வெளிநாட்டு தமிழர் இல்லங்களில் பார்க்கப்படுகின்றது. திரையிசை, கர்நாடக இசை, பக்திப்பாடல்கள் இசைத்தட்டுகள் இசைச்சுட்டிகள் Cassttee ஏராளமாக வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாகின்றது.

இப்பாடல்களை பாடும் கலைஞர்களையும் நேரில் அழைத்து நிகழ்ச்சிகள் நடத்துவது தமிழர்கள் வாழும் பல நாடுகளிலும் தற்பொழுது பிரபலமாகியுள்ளது. அமெரிக்கா, ஐரோப்பிய மேலை நாடுகளில் பெரும்பாலும் கர்நாடக இசைக்கலைஞர்களையும், மலேசியா, சிங்கப்பூர் போன்ற கீழைநாடுகளில் திரைப்பட மெல்லிசை கலைஞர்களையும் அழைக்கின்றனர். நல்ல தொகையும் பலவிதகணக்கில் வழங்குகின்றனர். இந்தியாவிற்கு இவர்களால் அந்நியச்செலவாணி கிடைக்கின்றது. என்றாலும் கலைஞர்களிடம் சுங்க அதிகாரிகளின் கெடுபிடி உண்டு.

வெளிநாடு செல்லவேண்டும் என்ற ஆர்வம் கலைஞர்களிடையே வளர்ந்துள்ளது என்றாலும் வெளிநாடு செல்லும் கலைஞர்கள் அனைவரும் பொருளாதார ரீதியில் வெற்றிகரமாக திரும்புகிறார்களா? பலர் தக்க வெளிநாட்டு நபர்கள் மூலமாக செல்லாததால் பலவித இன்னல்கள் அடைந்து திரும்புவதாக இயலிசைக்கு செய்திகள் வந்துள்ளன, சமீபத்தில் மலேசியா சிங்கப்பூர் சென்ற மெல்லிசை குழுவினரை அழைத்து சென்ற வெளிநாட்டு முகவர் Agent ஏமாற்றி விட்டதாக அறிகிறோம். தவிர இங்கேயே சிலர் வெளிநாடு அழைத்து செல்கின்றேன் என்று சில கலைஞர்களை உள்ளூர்காரர்களே பலவாறு ஏமாற்றியதாகவும் அறிகிறோம்.

எனவே வெளிநாடு செல்லும் கலைஞர்கள் சற்று கவனமாக இருக்க கேட்டுக்கொள்கிறோம்.

## தமிழிசை ஆதிமும்மூர்த்திகள்

சென்றாண்டு சென்னை தமிழிசைச் சங்க இசை விழாவில் டாக்டர் சீர்காழி கோவிந்தராஜன் தமிழிசை ஆதிமும்மூர்த்திகள் என 300 வருடங்களுக்கு முன் தோன்றிய அருணாசலக்கவிராயர், முத்துத் தாண்டவர், மாரி முத்தாப்பிள்ளை இவர்களைக் குறிப்பிட்டு விளக்கங்கள் தந்து அவர்களது பாடல்களைப்பாடி சிறப்பித்தார்.

பின்னர் சென்னை இராமலிங்கர் பணிமன்றம் நடத்திய இசைக் கலை விழாவிலும் இவர்களைப்பற்றி பேசப்பட்டு தனி இசையரங்களும் நடத்தப் பெற்றன. இவர்கள் அக்காலத்தே ஏராள தமிழ்ப்பாடல்களை (கீர்த்தனங்கள்) இசையமைப்புடன் பாடி தமிழிசைத்தொண்டாற்றி வந்தவர்கள். தமிழிசை விழாக்கள் நடத்தும் சபைகள் அனைத்திலும் இவர்களது படங்களை வைதது சிறப்பிக்க வேண்டும், பாடல்களைப் பாட வேண்டும் என இயலிசை பணிவன்புடன் கேட்டுக்கொள்கின்றது.

## நாரத கான சபை, கரூர்

| | |
|---|---|
| | ஜெர்மனி |
| 21-10-84 | ஸ்ரீமதி அஞ்லிகா ஸ்ரீராம் - பரத நாட்டியம் |
| 18-11-84 | கரூர் கிருஷ்ணமூர்த்தி - பாட்டு |
| | திருவள்ளூர் பார்த்தசாரதி - வயலின் |
| | திரு விடை மருதூர் ராதாகிருஷ்ணன் - மத்தளம் |


### இயலிசை விளம்பரக்கட்டணம்

| | |
|---|---|
| முழுபக்கம் | ரூ. 300 |
| அரைப்பக்கம் | ரூ. 150 |
| கால்பக்கம் | ரூ. 75 |
| குறைந்தளவு | ரூ. 50 |

கலர் விளம்பரங்களுக்கு 25% அதிகக்கட்டணம்

கலைத் தொடர்க் கதை

# ஆடலரசின் அரசர்

## 17. வண்டியில் வந்த கூத்து

நல்ல சாப்பாடு சாப்பிட்டுவிட்டால் கொஞ்சம் நேரம் ஒய்வு அல்லது படுத்திருக்கணும், அப்பொழுதுதான் உண்ட களைப்பு நீங்கும். பெரியவர் வீட்டில் பஞ்சாட்சர பாகவதரும், சுவாமி நாதனும் நல்ல விருந்து உண்டிருந்தாலும் உடனே விடைபெற்றுக் கொண்டு கிளம்பிவிட்டனர். காரணம், வண்டிக்காரன்.

அவன் கொண்டுவந்திருந்த பழையதை பச்சை மிளகாயுடன் பதம் பார்த்துவிட்டு பக்கத்தில் இருந்த தோப்பிலே புதுக்கள்ளையும் சாப்பிட்டுவிட்டு வந்திருந்தான். மாட்டினை அவிழ்த்து வண்டிகட்ட ஆரம்பித்தவன், 'பாகவதரே வண்டிக் கிளம்புது' என்று குரல் கொடுத்தான். காலையில் பாகவதருக்கு கொடுத்த மரியாதை பழையது பாகவதரைக் கூப்பிட்ட குரல் மரியாதை புதியது. புதிதாக அவன் குடித்த கள்ளின் வேலையே.

பாகவதர் 'இதோ கிளம்பி விட்டேன் முதலாளி' என்று பேசி வண்டியில் ஏறினார், வண்டி கிளம்பியது இதுவரை அமைதியாக வந்த வண்டிக்காரன், திடீரென்று குஷி ஏறி பேச ஆரம்பித்தான்.

'பாகவதரே உங்களுக்கு கூத்து பாட்டெல்லாம் தெ மா? என்று கேட்டான்,

பாகவதருக்கு என்ன சொல்வது என்றே புரியவில்லை கூத்து பாடல்கள் அவர் கேட்டிருக்கின்றார். ஆனால் அவையெல்லாம் தரமான முறையான இசைப்பாடல்கள் இல்லை எ வனம் செலுத்துவதில்லை என்றாலும் தெரியாது என்று பதில் சொல்லாமல் 'என்ன கூத்து' என்று கேட்டார்.

வண்டிக்காரன் விடியவிடிய கூத்து பார்ப்பானே தவிர அதன் கதை என்ன பொருள் என்ன விவரம் தெரியாது. என்னவோ பேச ஆரம்பித்தான்.

'என்ன பாகவதரே கூத்துன்னு தெரியல்லே என்கிறீங்க. ஒரு பாட்டு பாடரேன் கேளுங்க' என்று சொல்லிவிட்டு உரத்தகுரலில் பாட ஆரம்பித்துவிட்டான். அவன் பாட ஆரம்பித்ததும் பாகவதர் சுவாமிநாதன் இருவருமே பயந்துவிட்டனர். இவன் பாட்டை நாம் பொறுத்துக்கொண்டாலும் மாடுகள் மிரண்டு வண்டி ஒழுங்காக ஓடுமா என்ற அச்சம் கொண்டனர், ஆனல் அவனது பாட்டோ அவர்களுக்கு மிகுந்த வியப்பினைத் தந்தது. ஆம். சுருதி தவறுமல், வண்டி ஓடும் லயத்திற்கு ஏற்ப பாடினன் வண்டிக்காரன்!

கூத்து பாடல்களிலும் இவ்வளவு இசை நயம், பொருள் இருக்கின்றதா என இருவருமே வியந்தனர். சாதாரண வண்டிக்காரன் வரை இந்த கலை வருகின்றதோ - இதனை பெரிய இசைவிற்பன்னர்களான தங்களால் செய்ய முடியுமா என எண்ணினர்.

பாகவதர் 'சபாஷ் பலே, பேஷ்' என்று சொல்லி அவனைப் பாராட்ட அவன் அந்த உற்சாகத்தில் வண்டியை ஓட்ட மாடுகளும் அவனது பாட்டுக்கு ஏற்ப ஓடின. தஞ்சாவூர் சீமை வண்டிக்காரனுக்கு மட்டுமா ஞானம்! காவிரி தண்ணீர் குடிக்கும் மாடுகளுக்குக் கூட ஞானம்!

தஞ்சாவூர் நகர எல்லையில் இருக்கும் கருந்தட்டான்குடி வண்டி வந்ததும் சுவாமிநாதன் வண்டியைவிட்டு இறங்கி பாகவதரிடம் விடைபெற்றுக்கொண்டு தனது வீட்டிற்கு விரைந்தான்.

அவன் தந்தை நாதசுரம் சுந்தரம் பிள்ளை வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்திருந்தார். எதிர் திண்ணையில் கல்யாணகாரர்கள் சிலர் உட்கார்ந்து கொண்டிருந்தனர். அனைவரது முகத்திலும் ஏதோ கலவரம் இருந்தது. குறிப்பிட்ட நாட்களுக்கு முன்னரே திரும்பிய சுவாமிநாதனை சுந்தரம்பிள்ளை ஒன்றும் கேட்கவில்லை. அவன் தந்தைக்கு வணக்கம் சொல்லிவிட்டு வீட்டுக்கு உள்ளே சென்று விட்டான். கைகால் கழுவிவிட்டு பின்னர் பயபக்தியுடன் அப்பா பின்னர் வந்து உட்கார்ந்தான்.

வந்தவர்களில் ஒருவர் பேசிக் கொண்டிருந்தார்.

தாங்கள் எங்க குடும்பத்தில் சகல விழாக்களுக்கும் எப்பொழுதும் திருவாரூர் மேளம்தான் அழைப்போம். இந்த முகூர்த்தத்திற்கும் திருவாரூர் மேளம்தான் பேச ரயில்லே போனேம். வழியில் சிக்கலார் வந்து வண்டியில் ஏறினர். எங்களுக்கு அவர் அறிமுகம் இல்லை என்றாலும் பெயரைக் கேட்டிருக்கின்றோம். எங்களோடு வந்தவர் ஒருவர் அவரை அறிமுகம் செய்துவைத்தார். நாங்கள் திருவாரூர் போகும் விபரம் சொன்னேம். உடனே அவர் 'அய்யய்யோ உங்களுக்கு சங்கதி தெரியாதா, திருவாரூர் காரரைப் பார்த்து எத்தனை நாள் ஆகின்றது' என்று கேட்டார். நாங்கள் சென்ற கல்யாணத்திற்கு அழைத்தபோது பார்த்தோம் என்றேம். உடனே அவர் திருவாரூர் மேளக்காரர் இறந்துவிட்டார்; நேற்று தான் காரியம் என மிகவும் துயரத்தோடு சொன்னர், எங்களுக்கும் மிகவும் கவலையாகிவிட்டது. சிக்கலாரோ 'கவலைப் படாதீங்க அவர் வாசித்த இடங்களிலெல்லாம் நான்தான் போகின்றேன். எனக்கு சன்மானம் அதிகம்தான். இருந்தாலும் பெரியவருக்காக அவர் ரேட்டுக்கு வாசித்து வருகிறேன்' என்ருர்.

எங்களுடன் உடன் வந்து அவரை அறிமுகம் செய்து வைத்தவர் எங்களைத் தனியே கூப்பிட்டு 'நல்ல சந்தர்ப்பம்' வி ாதீங்க. இவர் வாசிக்க வருகின்ருர் என்ருல் நமக்கு ஊரில் நல்ல மதிப்பு கிடைக்கும். பழம் நழுவி பாலில் விழுந்தது போல் இவரையே பேசி முடிக்கலாம்' என்ருர். எங்களுக்கும் திருவாரூர்காரர் இறந்துவிட்டாரே, எப் டியும் வேறு நல்ல மேளம் ஏற்பாடு செய்துதானே தீரவேண்டும் என எண்ணம் வந்தது ஒடு ரயிலிலேயே கச்சேரி பேசி சிக்கலாருக்கு முன்பணம் கொடுத்தோம்.

அவர் பெற்றுக்கொண்டதும், தேதிக்கு சரியா முதல் நாள் மாலையே பெண் அழைப்பிற்கு வந்து சேருகின்றேன். நீங்க இந்த ஊரிலேயே இறங்கினல் எதிர்வண்டி பிடிச்சுடலாம் திருவாரூர் போனல் துக்கம் விசாரிக்க வேண்டிவரும் என்ருர் அதுவும் சரிதான் என்று நாங்கள் திருவாரூருக்கு இரண்டு ஊருக்கு முன்னேயே இறங்கி எதிர்வண்டியில் ஏறி தஞ்சாவூர் வந்தோம்.

பத்திரிக்கையில் அவர் பெயரைப் போட்டு உறவினர்க்கெல்லாம் கொடுத்தோம். 'அவர்கள் அனைவரும் எங்களைப் புகழ்ந்தார்கள் எப்படி சிக்கலார் ஒப்புக்கொண்டார் என்று சிலர் கேட்டார்கள். வயதான ஒருவர் கல்யாணத்திற்கு வண்டியிலாவது வந்து சேருகின்றேன். சிக்கலார் மேளம் என்ருல் எனக்கு உயிர் என்ருர்! எங்களுக்கு தலைகால் புரியவில்லை. அவ்வளவு மகிழ்ச்சி ஆனால் அதெல்லாம் இன்று காலை வரைதான் திடீரென்று சிக்கலாரிடம் இருந்து இப்படிதகவல் வந்துள்ளது என்றார்கள்.

இத்தனையும் கேட்ட சுந்தரம் பிள்ளை முகத்தில் எவ்வித சலனமும் இல்லை. 'சரி....நான் என்ன செய்யவேண்டும் என்று கேட்டார்.

'சிக்கலார் காலை முகூர்த்தத்திற்கு வந்து விடுவாராம். பெண் அழைப்பிற்கு மட்டும் மேளம் வேண்டும் என்று தஞ்சாவூரில் இருக்கும் சகல கலைஞர்களையும் கேட்டு விட்டோம். சிக்கலார் ஒப்புக்கொண்ட இடத்திற்கு வரமாட்டோம். அவர் வம்பு வேண்டாம் என்றார்கள். சிலர் தாங்களை அவருக்கு உறவு என்றும், தங்களிடம் அவருக்கு மதிப்பு உண்டு என்றும் சொன்னார்கள் தாங்கள்தான் வந்து வாசித்து எங்க குடும்ப மானத்தைக் காப்பாற்ற வேண்டும் இல்லையென்றால் உறவுக்காரங்க சிரிப்பாங்க' என்றார் கல்யாணக்காரர்.

'சரி...சாயங்காலம் வந்து வாசிச்சிடறேன். காலை முகூர்த்தத்திற்கும் அவன் வரவில்லையென்றால் சொல்லி அனுப்புங்க அவனுக்கு என்ன அசந்தர்ப்பம் என்று தெரியல....'' என்று இழுத்தார் சுந்தரம் பிள்ளை.

இதைக்கேட்டு வந்தவர்களுக்கு மகிழ்வு. இப்படி உடனே சுந்தரம் பிள்ளை வாசிக்க ஒத்துக்கொள்வார் என்று அவர்கள் எதிர்பார்க்கவில்லை அதற்கான காரணம் சுந்தரம்பிள்ளைக்கு மட்டுமே தெரியும். (தொடரும்)

## சைதை புரட்டாசி கிருத்திகை விழா!

### தருமபுரத்தார் மேளக்கச்சேரி

சென்னை சைதாப்பேட்டையில் உள்ள இருக்காரணீசுவரர் திருக்கோவிலில் உள்ள நாதசுரக் கலைஞர்கள் B. சீனுவாசன் சகோதரர்கள் வருடா வருடம் புரட்டாசி கிருத்திகை விழாவினைச் சிறப்பாக நடத்தி தஞ்சை மாவட்ட நாதசுரக் கலைஞர்களை அழைத்து நிகழ்ச்சிகள் நடத்துகின்றனர். இவ்வருடம் 13-10-84 அன்று இவ்விழா நடைபெற்றது.

மதுரை அரசினர் இசைக் கல்லூரி பேராசிரியர் தருமபுரம் A. கோவிந்தராஜன் விடிய விடிய இவ்விழாவில் நாதசுரம் வாசித்து முருகப்பெருமானை திருஉலா வரச்செய்தார். அவருடன் ஸ்ரீரங்கபட்டினம் P. இராஜகோபால் நாதசுரம் வாசித்தார். கும்பகோணம் A. மீனாட்சிசுந்தரம், லலிகம், A.S. இராமதாஸ் ஆகியோர் தவிலுடன் தென் சித்தூர் S.N. சுந்தரம் அவர்களின் சிறப்புத்தவிலும் மேளக்கச்சேரிக்கு ஏற்பாடு செய்திருந்தனர்.

## சந்திரிகா கோபாலன் நடன அரங்கேற்றம்

K. தண்டபாணி கம்பெனி அதிபர் T.N.K. அய்யங்கார் அவர்களின் பேத்தி செல்வி சந்திரிகா கோபாலனின் பரத நாட்டிய அரங்கேற்றம் சென்னை உயர்நீதி மன்ற நடுவர் டாக்டர் S. மோகன் அவர்கள் தலைமையில் 1-9-84 அன்று சென்னை வாணிமகாலில் நடைபெற்றது. சந்திரிகாவின் நடன ஆசிரியர் நாட்டரசன் கோட்டை M.A. கிருஷ்ணன் வழுவூர் பாணியில் நடனம் சொல்லி கொடுத்திருந்தார். தனது அழகில் குரலில் பாடி நட்டுவாங்கம் செய்ய சந்திரிகாவும் சிறப்பாக ஆடி அனைவரது பாராட்டுதலையும் பெற்றார்.

### தியாகராஜ சங்கீத வித்வத் சமாஜம்

மயிலை, சென்னை - 4

அக்டோபர் 84 நிகழ்ச்சிகள்

15-மாலை 6-30 — குமாரி S. லட்சுமி குழுவினர்

29- ,, — பத்தமடை கிருஷ்ணன் குழுவினர்

## முத்துசுவாமி தீட்சதர் இசை விழா!

சென்னை மயிலை சீனுவாச சாஸ்திரி கூடத்தில் 6-10-84 முதல் 9-10-84 வரை சங்கீதமும் மூர்த்திகளில் ஒருவரான ஸ்ரீமுத்துசுவாமி தீட்சதரின் நினைவாக இசை விழா ஒன்று நடைபெற்றது. விழாவினை திருமதி D.K. பட்டம்மாள் துவக்கி வைத்தார். தினசரி நடைபெற்ற இசை நிகழ்ச்சிகளில் B ராஜம் அய்யர், திருச்சூர் V. இராமச்சந்திரன் டாக்டர் S. இராமநாதன் T.M. தியாகராஜன். P.S. நாராயணசாமி ஆகியோர் பிரபல துணைக்கருவியாளர்களுடன் கச்சேரிகள் செய்தனர் விழாவிற்கு விளம்பரம் குறைவாக இருந்தாலும் ரசிகர்கள் கூட்டம் இருந்தது.

### கந்தன் அருட்சங்கம் உதவியுடன்

## 'திருப்புகழ் தேனிசை' இசைச்சுட்டி!

கடந்த 28-9-84 அன்று சென்னை அமைந்தகரையிலுள்ள கந்தன் அருட்சங்க தலைவர் திரு T.S. மோகனரங்கம் அவர்கள் மணிவிழா வில்லிவாக்கத்தில் திருப்போரூர் ஆதினம் ஸ்ரீலஸ்ரீ சிதம்பர சிவஞான சுவாமிகள் தலைமையில் நடைபெற்றது. இந்த மணிவிழா நினைவாக கந்தன் அருட்சங்கத்தார் 'திருப்புகழ் தேனிசை' என்ற இசைச்சுட்டியினை (Casset) சக்தி ரிகார்ட்ஸ் என்ற புதிய இசைத்தட்டு நிறுவனம் மூலம் வெளியிட்டுள்ளனர். இசைச்சுட்டியில் அருணகிரிநாதர் பாடிய திருப்புகழ், கந்தரலங்காரம் கந்தர் அநுபூதி ஆகிய பாடல்களை புரசை E. அருணகிரி, சிதம்பரம் S மீனாட்சிசுந்தரம், B.J. மாதவன், பவானியம்மாள், ரகுமாயிராமன் ஆகியோர் பாடியுள்ளனர். சிதம்பரம் S. மீனாட்சிசுந்தரம் இசை அமைத்துள்ளார்.

### வைத்தீஸ்வரன் கோயிலில்

## அருணகிரி நாதர் இசை விழா

கடந்த 17-9-84 அன்று தஞ்சை மாவட்டம் வைத்தீஸ்வரன் கோவிலில் இசை வேளாளர்கள் பொதுமனையில் அருணகிரி நாதர் இசை விழா நடைபெற்றது. மாலை வீதியுலாவில் நாதசுரக்கலைஞர்கள் கஞ்சனூர் K.V. தட்சணாமூர்த்தி, A.R. ராமதாஸ், T.P.N. வேணுகோபால், T.G. சுவாமிநாதன், திருப்புன்கூர் T.P. கிரிவாசன், T.P. பாண்டியன், ஆகியோர் கலந்து நாதசுர இசை வழங்கினர். திருப்புன்கூர் T.K கோவிந்தராஜன், T G. முத்துகுமரசுவாமி, T S. துரைராஜன், T.G கருணாநிதி, T.G- முத்துவீர், திருநாகேஸ்வரம் T.R. கோவிந்தராஜன், சீர்காழி T.N. கலியமூர்த்தி, திருமைலாடி T.M. ஜெயராமன் ஆகியோர் தவில் வாசித்தனர். ஏராள இசைக் கலைஞர்கள், பொதுமக்கள் கலந்து விழாவினைச் சிறப்பித்தனர்.

## மாண்டலின் சீனுவாசு அமெரிக்கா பயணம்

இளம் மேதை சீனுவாசு கர்நாடக இசையை மாண்டலின் என்ற மேல் நாட்டு கருவியில் வாசித்து கலை உலகில் புரட்சி செய்து வருவது ரசிகப் பெருமக்கள் அறிந்ததே அவன் கடந்த 26-9-84 அன்று அமெரிக்காவிற்கு இசை நிகழ்ச்சிகள் நடத்த சென்றுள்ளன. அவனுடன் வயலின் கலைஞர் திருவள்ளூர் V. பார்த்தசாரதி, மிருதங்கம் V ராஜாராவ் ஆகியோரும் உடன் சென்றுள்ளனர். இக்குழுவினர் 10 நாட்கள் அந்த நாட்டிலே சுற்றுப்பயணம் செய்து பல நிகழ்ச்சிகள் நடத்துவர் அவர்களுக்கு எங்கள் வாழ்த்து!.

## வயதான கலைஞர்களுக்கு உதவித்தொகை!

இயலிசை 1-8-84 இதழில் தமிழக அரசு வயதான ஏழைக்கலைஞர்களுக்கு வழங்கும் உதவித்தொகை சில காலமாக நிறுத்தப்பட்டிருப்பதைக் குறித்து எழுதியிருந்தோம் உடனே அரசு ஆவன செய்யவும் வேண்டியிருந்தோம். தற்பொழுது அரசு நடவடிக்கை எடுத்துள்ளதனை அறிந்து மகிழ்ந்தோம். 1982 வருடத்திற்கு பின் மனு செய்தவர்களையும் ஏற்கெனவே உதவிபெற்று 3வது வருட ஆய்விற்காக நிறுத்தப்பெற்ற கலைஞர்களையும் அரசாங்க அலுவலர்கள் கண்டு சென்றதாகவும் விரைவில் இவர்கள் பணம்பெற இருப்பதாகவும் அறிகின்றோம். ஒருவேளை தேர்தல் வருவதாலும் இந்த நடவடிக்கை இருக்கலாம் என்றாலும் ஏழைக்கலைஞர்கள் சார்பில் நன்றி தெரிவிக்க இயலிசை கடமைப்பட்டுள்ளது.

## பம்பாய் சண்முகானந்த சபை

## இசை நாட்டிய நாடக விழா

பம்பாயில் பல வருடங்களாக சிறப்பாக நடைபெற்று வரும் ஸ்ரீ சண்முகானந்தா பைன் ஆர்ட்ஸ் & சங்கீத சபை அக்டோபர் 84 இறுதியில் ஓர் இசை நாட்டிய நாடக விழா நடந்து உள்ளது. கீழ்க்கண்ட நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

அக்டோபர்

| | | |
|---|---|---|
| 26 | திருக்கருகாவூர் T. G. சுப்ரமணியம் குழுவினர் | நாதசுரம் |
| 27 | டாக்டர் M. L. வஸந்தகுமாரி | இன்னிசை |
| 28 | காலை நாடகம் ஸ்ரீ ஆதிசங்கரர் | |
| 28 | ராஜாரெட்டி—ராதாரெட்டி | குச்சிபிடி நடனம் |
| 29 | டாக்டர் N. ரமணி குழுவின் | புல்லாங்குழல் |
| 30 | லால்குடி G. ஜெயராமன் குமாரி J. விஜயலட்சுமி | இரு வயலின் |
| 31 | பண்டிட் கார்த்திக குமாரி | சிதார் |

நவம்பர்

| | | |
|---|---|---|
| 1 | D. K. ஜெயராமன் குழுவினர் | இன்னிசை |
| 2 | T. V. சங்கரநாராயணன் குழுவினர் | இன்னிசை |

'காஞ்சலி'

## மாதங்கியும் சரசுவதியும்

## இணைந்த இசை விழா!

காஞ்சிபுரம் காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சங்கராசாரிய சுவாமிகள் கர்நாடக சங்கீத கலையின் வளர்ச்சிப்பணிகளுக்காக 'காஞ்சி காமகோடி பீட கர்நாடக சங்கீத சேவா டிரஸ்ட் என்ற பெயரில் அறக்கட்டளை ஒன்றை ஏற்படுத்தியுள்ளார்கள் கர்நாடக இசை வளர்ச்சிக் கென்றே இசைக்கலைஞர்கள் மாணவர்களால் துவக்கிப் பெற்ற இரு சபைகளான மாதங்கியும் சரசுவதியும் இந்த அறக்கட்டளைக்கு நிதி திரட்ட உள்ளனர்.

இந்த இரு சபைகளும் இணைந்து சென்னை மயில் சீனிவாச சாஸ்திரி கூடத்தில் 'காஞ்சலி' என்ற பெயரில் 29-8-84 முதல் 5 நாட்கள் இசை விழா நடத்தினர். பாலக்காடு K.V. நாராயணசாமி மாஸ்டர் V. சீனுவாசு மாண்டலின், மாஸ்டர் ரவிகிரன் கோட்டு வாதியம், தஞ்சாவூர் T.M. தியாகராஜன், P.S. நாராயணசாமி, சிக்கல் சகோதரிகள் - புல்லாங்குழல், சுகுணா புருஷோத்தமன் ஆகியோரின் இசை நிகழ்ச்சிகள் நடைபெற்றன. தினசரி ஏராள கலைஞர்கள் ரசிகர்கள் வந்து நிகழ்ச்சிகளைச் சிறப்பித்தனர்.

## கலைப்படைப்புகள்

'நாதோபாஸனை' ஆசிரியர் நஜன்
128 பக்கங்கள் விலை ரூ. 12/-
பிரதிபா பதிப்பக வெளியீடு.

இசையின் பெருமை இசையால் வழிப்பட்ட முப்பது சான்றோர்களின் சுருக்கமான வாழ்க்கை வரலாறு, 60 பாடலாசிரியர்களைப் பற்றிய குறிப்புகள், மேளகர்த்தா ராகங்கள் லயம் மற்றும் தாளம் போன்ற சம்பந்தப்பட்ட தகவல்களை ஆசிரியர் சுவையாக இந்நூலில் அளித்துள்ளார்.

(தகவல்: ஹிக்கின்பாதம்ஸ், சென்னை-2)

TN/MS(S)/260
'IYALLSAI' Mussical Bi-Monthly Printed by T. Thitunavukarasu at Jayalakshmi Art Printers, Kavarai Street, Vadapalani Madras-26. Published / Edited by M. Lakshmi, 37, South Sivan Koil Street, Kodambakkam, MADRAS-600 024.




த. இராமநாதன்,
18, 4வது பிரதான சாலை,
RA புரம்,
சென்னை 28

## மணமக்கள் வாழ்க !

சென்னை தமிழிசைச்சங்க திருமுறை இசையாசிரியர் கலைமாமணி V சோமசுந்தரம் அவர்கள் வளர்ப்பு மகள் செல்வி மோகனாவிற்கும் ஆவா... சு. குஞ்சிதபாத தேசிகர் குமாரர் K. தண்டபாணி B.Com (Madras secretariat) அவர்களுக்கும் 21-8-81 அன்று சென்னை தியாகராஜநகரில் திருமணம் திருமுறை இசையுடன் சிறப்பாக நடைபெற்றது. முதல் நாள் மாப்பிள்ளை அழைப்பிற்கு டாக்டர் சீர்காழி கோவிந்தராஜன் குழுவினர் இன்னிசை வழங்கினர்.

---

தமிழக அரசவைக்கலைஞர் வயலின் V. கோவிந்தசாமி நாயக்கர் அவர்களின் பேத்தி செல்வி நளினி குமாரிக்கும் வேலூர் ராமானந்தம் அவர்களின் குமாரன் R. கருணாகரன் M.Sc. (Commercial Tax; Cudalore) அவர்களுக்கும் திருமணம் 12-9-84 அன்று சென்னை சுசதாப்பேட்டையில் நடைபெற்றது. முதல் நாள் நடந்த வரவேற்பில் டாக்டர் சீர்காழி கோவிந்தராஜன் அவர்கள் கச்சேரி செய்தார் கோவிந்தசாமி நாயக்கரின் பேரன் சிறுவன் V. சுரேஷ் சீர்காழி கச்சேரிக்கு வயலின் வாசித்தான்.

---

காந்தி சிலை

## பொள்ளாச்சி தமிழிசைச்சங்கம் திறந்தது !

பொள்ளாச்சி நகரில் நீண்டகாலமாக நல்ல கலை நிகழ்ச்சிகளை நடத்தி கலைத்தொண்டாற்றி வரும் பொள்ளாச்சி தமிழிசைச்சங்கம் கடந்த காந்தி பிறந்த நாளான 2-10-84 அன்று பொள்ளாச்சி கோவை சாலையின் தேசத்தந்தை மகாத்மா காந்தியடிகள் திருவுருவச் சிலையை நிறுவி திறப்பு விழா நடத்தினர். தமிழிசை ஆதரவாளர் பொள்ளாச்சி நா. மகாலிங்கம் அனைவரையும் வரவேற்க தி. எ. அவிநாசிலிங்கம் அவர்கள் தலைமையில் ஓர் தாழ்த்தப்பட்ட சிறுமி காந்தி சிலையைத்திறந்து வைத்தார். பல மதங்களைச் சார்ந்த பெரியார்கள் உரையாற்றினர். இரவு சுப்பு ஆறுமுகம் அவர்களின் வில்லிசை நிகழ்ச்சி நடைபெற்றது.



## கடிதங்கள்

தங்களால் நடைபெற்று வரும் இயலிசை இசை உலகத்தில் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்கின்றது. இசை அபிமானிகள் இளங்கலைஞர்கள் படித்து பயன் அடைகின்றனர். வாழ்க வளர்க இயலிசை.

சிவபுரி T.R. பத்மநாபன், நாதசுரம்
வைத்தீஸ்ரன் கோயில்

சுயலாப நோக்கில்லாமல் தாங்கள் ஆன்மீக விஷயங்களுக்கும், அருங்கலைகளின் நல் வளர்ச்சிக்கும் ஆற்றிவரும் அரும் பெரும் அரிய நற்பணிகளை எமது மன்றம் சார்பில் மனமார பாராட்டுகின்றேன்.

த. ஏகாம்பரம் தலைவர்
இறைபணி மன்றம், தாம்பரம்.

---




## காவடி சிந்து பாடல்கள் இசைச்சுட்டி !

சென்னிகுளம் அண்ணாமலை ரெட்டியார் எழுதிய சிந்து வகை இசைப்பாடல்கள் காவடி சிந்து பாடல்கள் என தமிழகத்தில் பிரபலமாக உள்ளவை. இப்பாடல்களைத்தொகுத்து இசைச்சுட்டியாக Cassette வெளியிட்டுள்ளனர். சென்ஸ் எலக்ட்ரானிக்ஸ் என்ற இசைத்தட்டு நிறுவனம். பாடல்களை ராஜ்குமார் பாரதியும், குன்னக்குடி பாலா அவர்களும் பாடியுள்ளார்கள். முன்னாள் நீதிபதி N. கிருஷ்ணசாமி ரெட்டியார் முன்னுரையும், பித்துகுளி முருகதாசு பாடல்களுக்கு விளக்க உரையும் இசைச்சுட்டியில் பதிவாகி உள்ளது.

---

## தமிழன் கண்ட இசை

ஆசிரியர்: ப. தண்டபாணி. B.E. M.Sc. (Engg)
40 பக்கங்கள் — விலை. 80 காசுகள்
இனமானப் பதிப்பகம் வெளியீடு.

இது ஒரு அரிய ஆராய்ச்சி நூல் இந்நூலின் 33-ம் பக்கத்தில் உள்ள குறிப்பொன்றை வழங்குகின்றோம். "தொல்காப்பியம் கூறும் பண்பட்ட தமிழிசை கி.பி. மூன்றும் நூற்றாண்டு வரையிலும் மிக உன்னத நிலையில் இருந்தது. அதன் பிறகு தமிழ் நாட்டில் இசைத் தமிழும் நாடகத்தமிழும் வீழ்த்தொடங்கியதற்கு முக்கிய காரணம் வடக்கே இருந்து வந்த மதவாதிகளே அறமே யாவரும் பின்பற்றுதற்குரியது என்றும், இசையினால் இன்பமும், நாடகத்தால் காமமும் பெருகுமென்றும் அவர்கள் கருதினர். எனவே அக்காலத்திலிருந்த அரசர்களுக்கும் அவர்கள் துர்ப்போதனை செய்து வந்தனர். அதன் விளைவாகப் பண்டைத்தமிழிசையும் யாழும் தேயத்தொடங்கின அந்நாளிலிருந்த இசை நூல்கள், நாடக நூல்கள் பல அழிக்கப்பட்டன.

தவிர இன்று கர்நாடக இசை என்று வழங்கும் இசை தமிழிசையே எனவும் அந்நூலில் ஆதாரத்துடன் விளக்கியுள்ளார்.

---

'வலங்கைமானில் விழா'

## அரசவைக் கலைஞர்களுக்கு பாராட்டு!

சமீபத்தில் தமிழக அரசால் அரசவைக்கலைஞர்கள் என்று நியமிக்கப்பட்ட மிருதங்கக்கலைஞர் தஞ்சாவூர் U. உபேந்திரன் வயலின் கலைஞர்கள் R. குமரேஷ், R. கணேஷ் இவர்களுக்கு தஞ்சை மாவட்டம் வலங்கைமான் மாசிப்பெரு விழா குழுவின் சார்பிலும், பொதுமக்கள் சார்பிலும் 14-8-84 அன்று பாராட்டு விழா நடைபெற்றது. கலைஞர்களுக்கு குடந்தை . P.B. நன்னப்பையர் அளித்த பொன்னாடைகளை போர்த்தினர்.

விழாவில் வலங்கைமான் S.A. சௌந்தரராஜன் நாங்கூர் N.C. செந்தில்நாதன் குழுவினர் நாதசுரம் வாசித்தார். சிறப்புத் தவில்கள் திருச்சேறை T.G. முத்துகுமாரசாமி, நாங்கூர் K. கருப்பையா, திருக்கருகாவூர் T.G. சிவகுருநாதன் ஆகியோர் உடன் வாசித்தனர். இரவு R. குமரேஷ் R. கணேஷ் வயலின் கச்சேரிக்கு வலங்கைமான் A. சண்முகசுந்தரம் அவர்கள் தவிலும், தஞ்சாவூர் U. உபேந்திரன் மிருதங்கமும் வாசித்தனர். ஏராள கலை ரசிகர்கள் கலந்து கொண்டனர். விழா ஏற்பாடுகளை தவில் கலைஞர் T.T. வேலு செய்திருந்தார்.